உ

சிவமயம்

ஸ்ரீ நாகநாத சுவாமிசகாயம்

திருமருதாரென்னும் நயினார்கோவில்

சவுந்தரநாயகிசமேத

ஸ்ரீ நாகலிங்கப்பெருமான்

# நாகாபரணம்

இஃது

இராமநாதபுரம் சமஸ்தான தேவஸ்தான மானேஜர்

ஸ்ரீமான்

**M. இராமநாத பிள்ளையவர்கள்**

வேண்டுகோட் பொருளுதவியால்

நயினார்கோவில் வில்வக்கண்ணுச்சாரியார் புதல்வர்

சங்கீத சாகித்ய வித்வான்

**R. V. சத்திவேலாச்சாரியார்**

அவர்களாலியற்றியதை

மதுரை

விவேகாநந்தா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

ரிஜிஸ்டர்டு] 1937 [விலை அணா 8.

உ

சிவமயம்

ஸ்ரீ நாகநாத சுவாமிசகாயம்

திருமருதூரென்னும் நயினர்கோவில்

சவுந்தரநாயகிசமேத

ஸ்ரீ நாகலிங்கப்பெருமான்

# நாகாபரணம்

இஃது

இராமநாதபுரம் சமஸ்தான தேவஸ்தான மானேஜர்

ஸ்ரீமான்

**M. இராமநாத பிள்ளையவர்கள்**

வேண்டுகோட் பொருளுதவியால்

நயினர்கோவில் வில்வக்கண்ணுச்சாரியார் புதல்வர்

சங்கித சாகித்ய வித்வான்

**R. V. சத்திவேலாச்சாரியார்**

அவர்களாலியற்றியது




மதுரை

விவேகாநந்தா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

ரிஜிஸ்டர்டு] 1937 [விலை அணு 8.

உ

சிவமயம்

ஸ்ரீ நாகநாத சுவாமிசகாயம்

திருமருதூரென்னும் நயினூர்கோவில்

சவுந்தரநாயகிசமேத

ஸ்ரீ நாகலிங்கப்பெருமான்

# நாகாபரணம்

இஃது

இராமநாதபுரம் சமஸ்தான தேவஸ்தான மானேஜர்

ஸ்ரீமான்

**M. இராமநாத பிள்ளையவர்கள்**

வேண்டுகோட் பொருளுதவியால்

நயினூர்கோவில் வில்வக்கண்ணுச்சாரியார் புதல்வர்

சங்கித சாகித்ய வித்வான்

**R. V. சத்திவேலாச்சாரியார்**

அவர்களாலியற்றியது




மதுரை

விவேகாநந்தா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

ரிஜிஸ்டர்டு] 1937 [விலை அணு 8.

உ

சிவமயம்

ஸ்ரீவில்லிபுத்தூர்-பெருமாள்நகர்

சங்கத்தமிழ்ப்பண்டிதர்

**வெ. முத்துராக்கக் கோனுரவர்கள்**

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்

## நேரிசை ஆசிரியப்பா



பாவலர் புகழும் பாண்டிமா நாட்டின்
காவலன் சேதுவிற் கழனிசூழ் மூதூர்
செறுதொறும் கெழுமிய செழுந்தா ளளினம்
உறுநில வுமிழ உயர்சே தாம்பல்
பகல்மலர் வளனிறை பண்புமேம் படுபதி

மிகமகிழ் சிறுர்தேர் மிசைவர மடவார்
பகலிடை மறுகில் பரப்பிய நென்மணி
கவர்தற் குறூஉம் கவினுடை வாரணம்
தவநனி புறமுறச் சார்ந்தெறி வொண்குழை
பண்மொழிச் சிறுரூர் மண்ணமை யத்தேர்

மண்ணிடை உருள்கொடா வளங்கெழு நன்னகர்
வாரணம் உரித்தோன் வதியும் தொன்னகர்
நாரணன் வலந்தொழும் நலம்புனை பொன்னகர்
திருமகள் உறைதரு திருமரு தூரெனும்
மருவிய நயினுர் வாழ்கோ விற்பெயர்

இருபால் பெயரிய உருகெழு மூதூர்
தருநிகர் கரத்தோர் தருமம் வளர்க்குமூர்
வேதியர் ஒருபால் வேந்தர்க ளொருபால்
மாதிற முடைய வணிகர்க ளொருபால்
வதிதரும் உழுநர் பதிகளும் ஒருபால்

32-2

உ

சிவமயம்

ஸ்ரீவில்லிபுத்தூர்—பெருமாள்நகர்

சங்கத்தமிழ்ப்பண்டிதர்

## வெ. முத்துராக்கக் கோனாரவர்கள்

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்

## நேரிசை ஆசிரியப்பா



பாவலர் புகழும் பாண்டிமா நாட்டின்
காவலன் சேதுவிற் கழனிசூழ் மூதூர்
செறுதொறும் கெழுமிய செழுந்தா ளவினம்
உறுநில வுமிழ உயர்சே தாம்பல்
பகல்மலர் வளனிறை பண்புமேம் படுபதி

மிகமகிழ் சிறார்தேர் மிசைவர மடவார்
பகலிடை மறுகில் பரப்பிய நென்மணி
கவர்தற் குறாஉம் கவினுடை வாரணம்
தவநனி புறமுறச் சார்ந்தெறி வொண்குழை
பண்மொழிச் சிறாரூர் மண்ணமை யத்தேர்

மண்ணிடை உருள்கொடா வளங்கெழு நன்னகர்
வாரணம் உரித்தோன் வதியும் தொன் னகர்
நாரணன் வலந்தொழும் நலம்புனை பொன்னகர்
திருமகள் உறைதரு திருமரு தூரெனும்
மருவிய நயினார் வாழ்கோ விற்பெயர்

இருபால் பெயரிய உருகெழு மூதூர்
தருநிகர் கரத்தோர் தருமம் வளர்க்குமூர்
வேதியர் ஒருபால் வேந்தர்க ளொருபால்
மாதிற முடைய வணிகர்க ளொருபால்
வதிதரும் உழுநர் பதிகளும் ஒருபால்

கதியுடன் கவிபுனை கவிஞர்க ளொருபால்
இத்தகைச் சிறப்புடை அத்தன் பதியில்
பத்தர்க் கிரங்கிப் பரன்நா கலிங்கப்
பேர்கொண் டெழுந்தருள் பெருமான் அன்பிற்
சேர்வில்வக் கணெனும் சிறப்புறும் நாமன்

செய்தவப் பேற்றால் ஜெனித்து விளங்கிய
மைவிழி மடவார் மடல்வரை வனப்பன்
ஆடல்சால் சிறப்பின் அரங்கமாகிய
நாடக மேடைசெய் நற்றவம் திகழ்மணி
அம்பிகை பாகற் கரும்சத கதம்பம்

நம்பித் தொகுத்தோன் நல்வழி நடையும்
சங்கீத சாகித்ய சத்திவேல் நாமம்
இங்கிதமாய்க் கொள் எழிலுடை கவிஞன்
பெருமான் பக்தியைப் பித்தர்க் குரைக்கும்
அருள்நோக் கத்தால் அன்பின் நிறைவால்

ஆலயத் தினிலுள அருங்கரு வேலம்
சீலமார் அசைசீர் செழும்பாப் பொருந்துமிந்
"நாகா பரண"மும் நன்றென வேண்டலும்
வாகுடன் எம்பெரு மான்மிக விரும்பலும்
சூடினன் இவ்வணி சூழ்மரு தூரனைப்
பாடினன் யமகம் பல்வகைத் தொடையும்

பத்தியாய் இன்னூல் படிப்போர்
முத்தமி ழின்பமும் மோக்ஷமும் பெறுவரே.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

32-2

உ

சிவமயம்.

ஸ்ரீவில்லிபுத்தூர் — பெருமாள் நகர்

சங்கத்தமிழ்ப்பண்டிதர் வே. முத்துராக்கக் கோனுரவர்கள்

இயற்றிய

# சாற்றுக் கவிகள்

## கழிநெடில் ஆசிரியம்

1. சால்எலாம் தாளம் மேவும் தண்பணை மருதூர் வாழும்
பால்மொழிச் சத்திவேலன் பஃறொடைமணிகள் கோத்து
வால்பணி அணியதாக்கி வனப்பெலாம் ஒருங்கு ஈட்டி
சால்புடை மருதூ ரர்க்குத் தன்மையாய்ச் சூட்டினனே.

## வேறு

2. பொன்னுரும் மதில்சூழ்ந்த திருமருதூர்ப் பதிவாழ்க்கைப்
புனித மேலோன்
மின்னுரும் தமிழ்மொழியில் மிகுசத்தி வேலுரைத்த
வின்நன் நூலைச்
சொன்னுலும் வாய்மணக்கும் தொட்டாலும் கைம்மணக்கும்
தூய்யவாழ்வு
பன்னுளும் கிடைக்குமதி பத்தியுடன் அனுதினமும்
படிப்போர்க்கம்மா.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

# முகவுரை

---

"குன்றிலிளவாடை வரும்பொழுதெல்லாமலர்ந்த திருக்
கொன்றை நாறத்
தென்றல்வரும்பொழுதெல்லாம்செழுஞ்சாந்தின் மணம்நாறும்"

சால்பினையுடைத்து நம் பரதகண்டம். பூமகட்குத் திலகம்போன்ற இப்பரதகண்டத்தில் ஈஸ்வரன், அடியார்கள் தம்மை அறிந்து உய்யு மாறு கோயில் கொண்டெழுந்தருளிய தர்மார்த்தகாம மோக்ஷ சித்தி யளிக்கும் புண்யக்ஷேத்ரங்கள் பலவுள. அவற்றுட் பெரும்பாலன வற்றின் க்ஷேத்ரமகத்துவங்களை மக்கள் நன்கு அறிந்துய்ய, போதிய தலபுராணங்கள் அனந்தமாவன வெனினும் ஏனைய க்ஷேத்திரங்க ளின் மகத்வங்களையும் மூர்த்திகளின் திருவிளையாடல்களையும் தெற் றெனத் தெரிவுறுத்தும் நூல்கள் மிகக் குறைவென்பது யாவரும் அறிந்ததே. பொதுவாக அந்தந்தக்ஷேத்ரங்களின் மூர்த்தி,தீர்த்த, தலமகத்வங்களை அவ்வவற்றின் தலபுராணங்களின் வாயிலாக நன்கு உணரலாம். ஆகவே ஒவ்வொரு க்ஷேத்ரத்திற்கும், கலம்பகம், மாலை, அந்தாதி, உலா, ஊசல் முதலிய பிரபந்தத்துறைகளடங்கிய தலபுராணங்கள் மிக்க இன்றியமையாதனவென்பது ஒருதலை. அதி லும் ஆஸ்திகம் நலிந்து நாஸ்திகம் மலிந்த இற்றைப்போழ்திலோ ஏனைய நூல்களைவிட இந்நூல்போன்ற பக்திரசம் ததும்பிய பனுவல் கள் நம் தமிழ்நாட்டுக்கு ஒருகோடியும் சாலும் என்பது மிகையாகாது.

நிற்க, பண்டைக்காலத்தில் துர்ஜனர்கள் மல்கி சர்ஜனர்கள் அல் கிக் கொடுஞ்செயல்கள் பல்கின அமயம் பகவான் அவதார புருஷ ராய்த்தோன்றி துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்து நன்மார்க் கத்தை நிலைநாட்டினர் என்பதைப் புராணவாயிலாக நாம் அறிந்துள் ளோம். பிற்காலத்திலும் அவ்விதக்குறைகள் நேர்ந்து சமயக் கொள் கைகள் அவமுறும் அமயம் பகவானுடைய அவதார புருஷர்களாய சைவ சமயகுரவர் நால்வரும் வைஷ்ணவாச்சாரியர்களும் தோன்றி, தம்முடைய பக்தி ததும்பிய திவ்ய பாசுரங்களால் அக்குறையை அறைசெய்து பக்தியை நிறை செய்தனர் என்பதைத் தேவாரம்,

திருவாசகம், திவ்யப்பிரபந்தம் என்னும் அருட்பாக்களின் வாயிலாக உணர்கிறோம். கடைச்சங்க காலத்துக்குப் பின்னும் இத்தகைய தொண்டை அத்தகைய அடியார்களும் ஆச்சாரியர்களும் தெய்வப் புலமைத்திருவள்ளுவர்போன்ற புலவர்களும் தங்களுடைய உபந்நியாச நீதிநூல்கள் முகத்தாலும் செய்திருக்கின்றனர் என்பது மலைவிளக்கு. இவ்வாறு நிகழ்ந்துவருவது தொன்று தொட்ட மரபுஆகும். அங்ஙனமே நாஸ்திகம் மலிந்து தெய்வபக்தி நலிந்து வரும் இஞ்ஞான்றும் பண்டையர் செய்த தொண்டை, தமிழ் மக்களாய் உற்பவித்த நாமும் ஈண்டு எடுத்தாற்றி வரவேண்டும் என்பது எம்மனோர் நோக்கம்.

அதற்கிணங்க, "நாகாபரணம்" என்னும் திருநாமம் அணிந்த இந்நூல் எனது ஆப்த நண்பரும் பண்டைச்சரிதங்களை உள்ளவாறே நடித்துக் காட்டி மக்களிடம் நீதிமார்க்கத்தை நிலைநாட்டிவருபவரும், ஸ்ரீநாகநாதனை அண்மி தினமும் முத்தமிழும்பாடுபவரும் திருமருதூரெனும் நயினார்கோவில் என்ற திவ்யக்ஷேத்ரத்தில் உறைபவருமான சங்கீத சாகித்ய வித்வான் R. V. சத்திவேல் ஆச்சாரியார் அவர்கள் இயற்றியதாகும். இந்நூல் சொற்சுவை பொங்கிப் பக்திரசம் ததும்பிய திருவிருத்தம், கலித்துறை, வெண்பா முதலிய பாக்களாகிய பூக்களாற் கோக்கப்பட்டு யமகம், அந்தாதி, திரிபு முதலிய தொடைகளால் தொடுக்கப்பட்டு "நாகாபரணம்" என்னும் பிரபந்த மாலையாக்கித் திருமருதூரெனும் நயினார்கோவில் என்ற திவ்யக்ஷேத்திரத்தில் கலியுகவரதராய் அடியார்களை உய்விப்பான் முளைத்தெழுந்த ஸ்ரீநாகநாதருக்குச் சூட்டியதாகும். இச்க்ஷேத்ரமான்மிய மகத்துவத்தை ஆயிரம் நாவையுடைய ஆதிசேடனும் சொல்லித் துதிக்க முடியாது ஒருவாறு தியங்கினனென்றால் எம்போன்றோர் எங்ஙனம் சொல்வது? எனினும் திருப்பாற்கடலை ஒரு பூசையானது நக்குபுபுக்கும் கொள்கையனைச் சொல்லப்புகின் இங்கு கோயில் கொண்டெழுந்தருளிய பெருமான் அடியார்பொருட்டுப் பல திருவிளையாடல்கள் புரிந்து பணிவார் பிணிதீர்த்து வேண்டுவார்க்கு வேண்டுவன அளித்து இகபரசாதனங்களனைத்தையும் நல்கிக் கடாட்சித் தருள்வது உள்ளங்கை நெல்லிக்கனி. இச்க்ஷேத்ரம்தலவிசேடம்,

மூர்த்திவிசேடம் தீர்த்தவிசேடம் புற்றடிமகத்வம் முதலிய மகத்வங்களைப் பொருந்தியது.

இனி இவரியற்றிய இந்நூலின் கவிப்பெருக்கினின்றும் ஊறும் சுவைப்பெருக்கே அறிஞர்களுக்கு முகவுரையாக, ஏனையோர் முகவுரையும் இந்நூலுக்கு வேண்டுமோவெனின்,

"ஆயிரம் முகத்தால் அகன்றதாயினும்
பாயிரம் அல்லது பனுவல் அன்றே" என்பதற்கிணங்கவும்,
"இறைவனே வாய்மலர்ந்திரீஇய நூலாயினும்
முறைவகுப் பியம்புமோர் முன்னுரைவேண்டும்" என்பதற்கிணங்கவும்,

"தோன்றுதோற்றித் துறை பல முடிப்பினும்
தான்றற்புகழ்தல் தகுதி யன்றே" என்பதற்கிணங்கவும்,

இந்நூலுக்கும் ஒரு முகவுரை அவசியமாயிற்று. இந்நூலாசிரியரது நாவண்மையைப் பற்றியும் பாவண்மையைப் பற்றியும் பலரும் அறிந்திருப்பாராயினும் இன்னுரை நாடகசாலையிற் கண்ணுறும் நண்பர்களுக்கு யான் கூறவேண்டுவதில்லை. எனினும் ஏனையோர்பொருட்டு யானும் ஒருவாறு இயம்ப முற்படுகின்றேன். இவரது இந்நூலிலுள்ள பாக்களில் மல்கிய சொற்சுவை, பொருட்சுவை, பக்திச்சுவை முதலியவைகளின் பெற்றியை என்னென்றெடுத்துரைப்பது! "நவில்தொறும் நூல்நயம் போலும்" என்றபடி கவிதொறும் புத்தமுதச் சுவை அதிகரித்துக்கொண்டே செல்வதை உன்னில் நம் ஆச்சாரியார் முத்தமிழிலும் வல்லுநர் என்பதை மொழியவும் வேண்டுமோ? ஆகவே, இந்நூல் படிப்பினும் படிக்கக்கேட்பினும் அவ்வமயமே பாமரர் முதல் பண்டிதர்வரை யாவரையும் ஈஸ்வரபக்திக்குள்ளாக்கிச் சத்காரியங்களைச் செய்யப் புகுவிக்கும் என்பது எனது துணிபு.

இன்னும், "ஆளாகவழிதேடி" என்ற தொடக்கத்தையுடைய பதிகத்தின் பொருளை ஆயுங்கால் இவர் பெருமானிடத்தில் அந்தரங்க சிநேகமுடையவர் என்பதும் தெற்றெனப் புலனாகின்றது. மேலும், "தாய் சவுந்தரநாயகி தமியேன் வருந்தச்சகிப்பளோ" என்னுமிடத்து ஓகாரம் சகிக்க மாட்டாள் என்னும் எதிர்மறைப் பொருளைத் தருகின்றது. அங்ஙனம் துணிவோடு கூறியதை நோக்கு

மீடத்து இவர் முன்னமே அம்மையின் கடாக்ஷம் பெற்றவர் என்பதும் உணரக்கிடக்கின்றது. "பசித்தாலும் நாகலிங்கமென்பேன்" என்பனவாகிய பிரபந்தங்கள் இவரது பக்தி வைராக்கியத்தை நன்கு புலப்படுத்துவதோடு பக்தி ரசத்தைப் பிழிந்து நமக்கும் உண்ணக் கொடுக்கின்றன. "மட நெஞ்சமான" எனும் பதிகத்தில் முதல் மூன்று அடியானது உலகத்தில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருகின்றன வென்ற வேதாந்தப்பொருளை இலகுவில் வெள்ளிடை மலையென விளக்குகின்றது. இன்னும், "செந்தாதிருந்தொளிரும்" என்ற பதிகத்தில் அன்புததும்பி பாடுவோர் மனத்தை உருக்கிப் பிர்ம்ம மயப்படுத்துவதென்றால் பகவான் இப்பாடலுக்கு உருகா திருப்பரோ? இனியும் பாடல்களைக் குறித்துச் சொன்னோமானால் முகவுரை விரியும் என இத்துடன் சில சொல்லி முடித்துவிடுகிறேன். பொதுவாக இந்நூல் ஆகமநூல்களிலும் துணிந்து கூறமுடியாத மயக்கமான பொருட்சாரங்களையும் சுலபமாய் வெளியுறுத்துகின்றது.

இத்தகைய நூல்களே தெய்வ பக்தியையும் ஞானத்தையும் சத்காரியங்களையும் நம் தாய்நாட்டில் அபிவிருத்தி பண்ணும் தொண்டு புரிய ஆற்றலுடையனவாகும். ஆகவே இந்நூலியற்றிய ஆசிரியருக்கு நம் தமிழகம் மிகவும் கடப்பாடுடைத்தாகும். இந்நூலின் பதிகங்களைப் படிப்போர் ஆங்காங்கே பொருந்திய பக்தி ரசத்தைப் பருகி மகிழ்வாராக.

வல்லம்
4—12—35

இங்ஙனம்,
வெ. முத்துராக்கக் கோனார்,
*சங்கத்தமிழ்ப் பண்டிதர்,*
ஸ்ரீவில்லிபுத்தூர் — பெருமாள்நகர்.

## சாற்றுக்கவிகள்

இஃது

மதுரைத் தமிழ்ச் சங்கத்து வித்வத் பரீக்ஷைகளில் தேர்ந்து சர்டிபிகேட்களும் மெடலும், ஆண்டிபட்டி சமஸ்தானத்து செந்தமிழ்க் கவிராஜ சிங்கமென்ற பட்டமும் பொற்பதக்கங்களும் வயிரக் கடுக்கனும் வயிரக்கடிகையந்திரமும், சேதுசமஸ்தானத்திற் பண்டிதப் பட்டத்தொடு மெடலும் பரிசுபெற்றவரும், இராமநாதபுரம் ராஜாஹைஹஸ்கூலிற் பல்லாண்டு தலைமைத் தமிழாசிரியராயிருந்து யிளைப்பாறும்

### வி. திருஞானசம்பந்தக் கவிராயரவர்களியற்றியது.

ஆசிரிய விருத்தங்கள்.

1. பொன்னம் பலத்துப் பதஞ்சலியும் புலியும் பரவப் புரிநடன
மன்னன் பரவிப் பணிபணிய மருதூ ரிலிங்க வடிவாகி
மன்னுங் கீதப் பிரியமுடன் வரதப் பெருமா னெனவுலகம்
பன்னிப் பயிலப் பலவரமும் பணிவோர்க் கருளும் பரமசிவன்.

(வேறு)

2. அன்னிய மதத்து வேந்தன் அதிசயத் தடிமை யாகி
மன்னுபல் சிறப்புச் செய்ய மருவுசித் தருளி யாண்டோன்
கன்னிஞ டதனில் வில்வக் காட்டுவேட் டுவனைக் காத்தோன்
நன்னய நாகநாதன் நாண்மலர்ப் பாதம் போற்றி.

வேறு

3. பத்திரசந் தத்தளிக்கும் வெண்பாவா சிரியவினம்
பயில்பாவாலே
சித்திரமும் பொருளணியுந் திகழ்யமகம் திரிபுவகை
சிறப்பப்பாடி
முத்தமிழி னின்சுவையும் முதிர்ந்திடநா காபரண
முறைப்பேர் சூட்டி
வித்தகர்மெச் சிடவணிந்த வித்துவபூ ஷணமவன்பேர்
விளம்பக்கேண்மோ

4. மன்னுநயி ஞர்கோவில் வாழ்பவர்செய் புண்ணியத்தின்
வடிவாய் வந்தோன்
பொன்னுறுசீர் விஸ்வபிர்மப் புனிதகுல வில்வக்கண்
புதல்வ ஞனேன்
கன்னிநறுந் தண்டமிழை லக்ஷணல க்ஷியமுறையாய்க்
கற்றுத் தேர்ந்தோன்
என்னனைய புலவர்புகழ் சத்திவேற் கவிஞனெனும்
இசைவல் லோனே.

5. சேதுபதி மன்னவன்றன் தெய்வதல மந்திரியாய்த்
திகழுந் தூய
மாதுபதி புகழ்ராம நாதவள்ளல் வேண்டியன்பால்
வழங்கு பொன்னுல்
ஓதுதமிழ்ப் புலவர்களும் கல்லூரி மாணவரு
முவந்தே கற்க
ஆதரஞ்சேர் அச்சிரத மேற்றியலங் கரித்துலகுக்
களித்தான் மாதோ.

இவை

மதுரை நான்காந் தமிழ்ச்சங்க ஸ்தாபகரும் பாலவனத்தஞ்சமீந் தாருமான ஸ்ரீமான் பாண்டித்துரைத்தேவரவர்களால் ஆதரிக்கப்பெற்றும் அவர்கள்பால் கல்வி பயின்றவரும் இராமநாதபுரம் சேது சமஸ்தானத்திலும் திருவாவடுதுறை ஆதீனத்திலும், வித்வத் பரிசுகள் பெற்றவரும் இராமநாதபுரம் மஹாராஜா ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியருமான

## சிவஞானம் பிள்ளையவர்களியற்றிய

### அறுசீர்க்கழில் நெடியாசிரிய விருத்தம்.

கன்னல் கமுகே எனத்தோன்றுங் கழநி புடைசூழ் திருமருதூர்
தன்னில்முளைத்தசிவக்கொழுந்தைச்சேர்வார்தமதுவினையகலும்
என்னத் தெரிந்தே முன்னவர்க்கு எழிலார் நாகா பரணமென
முன்னிப் புனைந்த பாமாலை சூடு முரவோன் தனைமொழிவாம்

சங்கத் தமிழ்கள் மூன்றினையும் தாழ்வி லாதே கற்றுணர்ந்த
பொங்குபுகழார் புகழ்ந்திடுநற்பொருள்சேர்பாக்கள்புனைந்ததனை

எங்கு மிசையால் நனிபரப்பி எல்லோர் தமக்கும் நடித்துரைப்
போன்
மங்கை யாரும் மடலூரும் வடிவே திகழும் வனப்புடையான்
மன்னர் மதிக்கு மதியூகி வறியோர் தமக்கு மனமகிழ்ந்து
அன்ன மளிக்குங் கொடையாளன் அறிவோன் வில்வக்
கண்ணுமைந்தன்
தன்னே ரில்லாச் சிவனடியார் தமையே வணங்கும் தகவுடையான்
அன்னோன் சத்தி வேலெனவே அறிவோர் புகழும் பாவலனே

---

முத்தமிழ்க்ஷேத்ரம்

மதுரகவி, வீ. நட்ராஜக்கவிராயரவர்களியற்றிய

அறுசீர் விருத்தம்.

(1) நிலைசார்ந்த மனத்தவர்க்கும் நிறைவேதச் செல்வருக்கும்
நித்தி யத்வக்
கலைசார்ந்த விற்பனர்க்கும் கனிந்தருளி வந்தார்க்குங்
காத்தி ருக்கும்
சிலைசார்ந்த திருமருதூர்த் திருநாக லிங்கனுக்கோர்
திருவின் மிக்க
தலைசார்ந்த திருநாகா பரணமதை யுளமகிழ்ந்து
சாத்தி னனே!

(2) அன்னவன்ற னுரெனிலோ அரியதமிழ்க் கலைபலவும்
ஆய்ந்த வாசான்
மன்னவர்தா மதிக்கவரு மெழில்சொர்ன பாரதியார்
மகிமைச் சீடன்
பொன்னுலவு விஸ்வகுல திலகனும் வில்வக்கண்
புத்ர ரத்னம்
மின்னவருஞ் சத்திவே லென்னவரும் புகழ்படைத்த
மேலோ னம்மா!

(3) *மாம்பழத்தின் சுவையறிந்த △மன்னவரும் மாம்பழமும்
வான்சென் ஞுலும்
†தேம்பழத்தின் சுவையுளதா லினித்தளரோ மெனமகிழ்ந்து
§சேது மன்னர்
தாம்பழக வந்ததெனத் தமிழ்மணியெல் லாந்திரட்டித்
தந்தா ரின்றே
நாம்பழக வேண்டுவதே நாமகளும் வேண்டியருள்
நல்க மாதோ!

---

இஃது

நயினூர்கோவில் தமிழாசிரியர்

## மருதஞ்சிவகுருநாதரவர்க ளியற்றிய

எண்சீரடியாசிரிய விருத்தம்.

சுகம்பெறநாடிடு முலகீர் சொல்லுவது கேண்மின்
ஜோதிதிரு நாகலிங்கத் தொருபரமன் றனக்கே
அகம்பெறநா காபரண மெனுமினிய செஞ்சொல்
அணிமாலை யொன்றுசெய்தா னருந்தமிழில் வல்லோன்
யுகம்பெறவே குலம்பெருகு யோகசத்தி வேலன்
யூகமொடு மாங்கதுகொண் டானையன்பா லர்ச்சித்
திகம்பெறவே யுடற்பிணியு மினிப்பிறவிப் பிணியும்
எய்தாது வாழ்ந்திடுக வெந்நாளு மினிதே.

---

*பழநி, மாம்பழக் கவிச்சிங்கநாவலர். △இராமநாதபுரம் சேதுபதி பொன்னுச்சாமித்தேவரவர்கள். † நாகாபரணம். § நாகநாத சேதுபதி யென்னும் சண்முகராஜேஸ்வர சேதுபதியவர்கள்.

உ சிவமயம்.



## ஸ்ரீநாகலிங்கப்பெருமான்

ஆசிரியப்பா.

சிங்கா தனச்சேது பதிவில்வ வனமீது
சித்தாய் முளைத்தலிங்கம்
சேடனுக் குங்கான வேடனுக் கும்பாத
தெரிசனந் தந்தலிங்கம்
மங்காத முல்லாவின் மகளான வூமையை
வாய்பேச வைத்தலிங்கம்
வருநாம தேவகீ தங்கேட்க மேற்குமுக
மாகத் திரும்புலிங்கம்
கங்கா குலத்திலொரு கவிராய ருக்கதிக
கனதனந் தந்தலிங்கம்
கண்ணிலாக் குருடனந் தாதிபா டச்செய்து
கண்ணைக் கொடுத்தலிங்கம்
செங்கா லனங்கழநி சூழுமரு தூரெனுஞ்
க்ஷேத்ராத் தெழுந்தலிங்கம்
தீராத வினையெலாந் தீர்த்திர க்ஷித்திடுந்
திருநாக லிங்கமிதுவே.

ஸ்ரீசவுந்தரநாயகிசமேத நாகலிங்கப்பெருமான்

நாகாபரணம்

## கணபதி துதி.

வெண்பா.

1. வாகானு கூலமுத்தி மாமருதூ ராண்டவன்மேல்
நாகா பரணமதை நானுரைக்கப்—பாகார்சொல்
நம்பித் தொழுமவையை நற்கயிலை யிற்புகுத்த
தும்பிக்கைத் தேவன் துணை.

தந்திமுகன் பஞ்சாமிர்தம்
திரிபந்தாதி வெண்பா.

2. புட்பம் பழந்தேங்காய் பூரிபக்ஷ ணம்படைப்பேன்
நுட்பம் பழந்தேங்கா நுண்ணறிவும்—நட்புங்
குணபதியே பாதடம்பொன் கோருவரந் தாருங்
கணபதியே பாதவணக் கம்.

3. கம்பனம்பி காபதியுங் காளமே கம்பொதிகைக்
கும்பனம்பி காபதியுங் கும்பிடுமுன்—செம்பதுமப்
பாதமெனக் குஞ்சதமாய்ப் பாலிப்பாய் நின்கருணை
வேதமெனக் குஞ்சரவாழ் வே.

4. வாழவரு ளேவுசித மன்னவனுக் கும்வதன
வேழவரு ளேவுசித மெய்ப்பொருளே—சூழெயினர்
தங்கச் சிகைமுருகத் தம்பிதொட்டுக் கூடவந்த
வங்கச் சிகைமுமதா வா.

5. வாமனத்தா னின்ப மருகா மலர்ப்பாணக்
காமனத்தா னின்பலனே காணவே—நேம
விரிபுவனப் பாகவர மேதருவிக் னேசா
திரிபுவனப் பாகவருட் செய்.

6. செய்யகலா கீதஞ் செவிகுளிர யான்பாட
மெய்யகலா வித்வஜனர் மெச்சிடவே—துய்ய
மனமுதவும் பக்குவமு மாறுதென் னுளுந்
தனமுதவும் பஞ்சாமிர் தம்.

குகமயம்.

## முருகபிரான் யமகவெண்பாப் பதிகவந்தாதி.

7. திருவாவி னன்குடிவாழ் தேவே யிதயத்
திருவாவி னந்தடையேன் சேயே—தருவாய்
வனசத்தா ளைப்பார்த்த வாசிற்றூர் வாழெவ்
வனசத்தா ளைப்பார்த்த வா.

8. வாகனத்தா ணைப்பிரண வங்கேட்ட தோகைமயில்
வாகனத்தா ணைப்பெண் மணவாளா—கோகனகை
துங்கந் தனம்புகழுந் துய்யவரு ளுங்கொடெப்போ
துங்கந் தனம்புகனிந் தோன்

9. தோன்றுதா பாதந் துதித்துப் பொதிகையமர்ந்
தோன்றுதா பாதந் துதித்திக்க—மான்றேடிக்
காவளத்தி லங்குவள்ளிக் காகவந்த வேலவசி
காவளத்தி லங்குங்கு கா.

10. காவடியா ரங்கங் கலிங்கத் திருந்துவந்து
காவடியா ரங்கங் களுக்கொருதா—தாவென்று
பூசிப்ப ரங்குன்றன் பொன்னூர்ந்த வெண்ணீறு
பூசிப்ப ரங்குன்றம் போய்.

11. போயவுணர் சித்தம் பொருந்திப் புரிந்தகெடும்
போயவுணர் சித்தா வுயர்சமரிற்—றாயஜெயா
சம்பேசன் போதா சரவணனே யென்னுடன்நி
சம்பேசன் போதாநா தா.

12. தாதுதிரும் பாதா தமியேன் மனதுவருந்
தாதுதிரும் பாதா தயவென்மேல்—நீதப்
பழநிமலை யாள்குமரா பாரதண்ட பாணி
பழநிமலை யாள்குமரா பார்.

13. பாரா திருப்பதியான் பாவியென்று துங்ககடம்
பாரா திருப்பதியான் பன்மருகா—சீரார்
முருகா தினந்தரும மோகதுதிக் குள்ள
முருகா தினந்தரும மோ.

14. மோகாதி யானபவ முந்நீர்க்க நின்போலா
மோகாதி யான முழுமுதலே—பாகார்
மதுரிதவாக் குத்தரனே வந்தருளு வாய்சே
மதுரிதவாக் குத்தரனே மா.

15. மாறு திருந்து வகையருளு வாயெதுங்கை
மாறு திருந்து வகையருளுந்—தேறுமுரித்
தானவருக் கஞ்சோ தரபுதல்வா தக்கவொன்ப
தானவருக் கஞ்சோ தரா.

16. தராதலவா ணுடுஞ் சகல வுயிர்நீ
தராதலவா நாடுந் தனமுந்—தாராதரவம்
சத்திவே லின்பாகத் தான்புயத்தாள் தேவிசுதா
சத்திவே லின்பாகத் தா.

---

## ஸ்ரீ நாகலிங்கப்பதிகம்

### ஆசிரிய விருத்தம்.

1. பூரண பரப்பிர்ம்ம சொருபமே யகிலாண்ட
புவனசர வசர மாகிப்
புல்லாதி மிருகங்கள் தாவரங் களினும்
பொருந்துமுயர் வாய் மானிடக்
காரண சரீரியா யதிலொருவ னெனதிதய
கமலால யத்தி ருக்குங்
கடவுளென வுனையறிந் திடவறிவு தந்தநீ
கனதைதந் திடுதல் பெரிதோ
தாரணையின் வகையாதி யோகங்கள் புரிபரம
சாதுசங் கத்தை நாடி
தத்வமசி யெனுமொரு மகாவாக்ய வத்வைத
தனிமயம் பெறவருளு வாய்
நாரணனு நான்முகனு முணராத பாதமே
நாடுதிரு மருதூர் வளர்
நாதசங் கத்துய்ய வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே

2. ஆளாக வழிதேடி யுனையடைந் திடுமுன்ன
மறியாப் பிராயத்தி லே
அனியாய வஞ்சகன் உனதுவிழி யாலன்றே
யனலா யெரிந் திடுமத
வேளான வன்விரக தாபத்தை யேதந்து
மேனுட் புரிந்த பந்த
வினையான பெண்ணாசை யைக்கொடுத் தேயதிக
வேதைப் படுத்திவிட் டான்
தாளாதி யானுனது திருவடி துதிக்கவந்
ததுமுழுவ துந்தெரிந் தும்
சற்றுவ துன்மன மிரங்கா திருப்பதுந்
தர்ம்மமோ வர்ம்ம மாமோ
நாளாக நாளாக மிகுபுகழு டன்கனத
னங்கள்தந் தருள்புரிகு வாய்
நாதசங் கத்துய்ய வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே.

3. பண்டுநாட் செய்திட்ட பாவங்கள் யாவும்
பருத்துத் திரண்டு ருண்டு
பாரினை மயக்கவரு மாயப் பசாசமாய்ப்
பஞ்சவிந் திரியங்க ளாய்ப்
பெண்டுநா னெனவந்த கபடக் குடும்பப்
பெருஞ்சுமை சுமந்த விதியைப்
பேணித் திருத்துமகிழ் பேரின்ப மிகுகரும்
பிற்பிழிந் திட்ட ரசமே
தொண்டுநா னெனவறிந் திதுசமய முதவுஜெய
சுபகரம் நிறைந்த நிதியே
தோகையழ கியமினோர் பாகமுற விடைமீது
சொருபதெரி சனமே தருவாய்
நண்டுநா டியவயற் செந்நெலதி முத்தீனும்
ரமணம் பொருந்து மருதூர்
நாதசங் கத்துய்ய வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே.

4. பகரா திருந்ததிலே யறிவீன ரேமிகும்
பாரிற் பொருந்து தெய்வப்
பக்திமிகு நல்லொழுக் கங்கற்ற வுத்தமர்கள்
பார்க்கக் கிடைக்க வில்லே
நிகரா ரெனக்கெனக் கெருவமுள் ளோர்களிடம்
நெஞ்சமஞ் சிப்ப ணிந்து
நேசித்தி டாதுண்மை பேசிச் சதானந்த
நித்யானு கூல மகிமைச்
செகராஜ யோகியென நற்பெயர் வழங்கிடச்
செய்யதிக பொருளுதவி யே
ஜீவகா ருண்யா வரோதயா பரதஜோ
திடபண்டி தாமாந்த் ரிகா
நகரா முழங்குமணி மேளவாத் தியவோசை
நாடுதிரு மருதூர் வளர்
நாதசங் கத்துய்ய வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே.

5. தடையிலா துன்னருள் கிடைக்குமென நம்பத்
தகுந்தது நலத்தின் வரவே
தகுமனப் புகழுமதி சயவெற்றி யிகபாரச்
சாதனம் பெறுவழிய தே
இடையிலா ததிகஜெப தபமுங் குறைந்திடா
தெப்பொழுது மொருநிறைய தாய்
இஷ்டசித் திகள்பெருக நிஷ்டைபக் தியிலுருகு
மெனேநினேந் திதுசமய மே
விடையிலா ரோகணித் தினியகன வினில்வந்து
விஞ்சைமந் திரமுரைப் பாய்
வேடனுக் கும்மாதி சேடனுக் கும்ப்ரீத
மிகுதெரிச னந்தந்த வா
நடையிலா னந்தமுறு மன்னங்கள் தாளத்தை
நண்ணியடை காக்கு மருதூர்
நாதசங் கத்துய்ய வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே.

6. மடநெஞ்ச மானதொரு வழிகொண்டு நில்லாது
மாறிமா றிச்சிதறி யே
மங்கையர் குடும்பநொம் பலமீதி லேசிக்கி
மதிவந்து முனையெண்ணி யே
தொடவுஞ் க்ஷணப்பொழுதி லதைமறந் தும்பின்பு
தொந்தரையி லுருகும் படி
சோதித்த தின்றோடு போதுமினி யாவதுன்
துணையருட் பெறுமவ் வழிப்
படவுஞ் சதாகால வஞ்சகம் பொய்களவு
பாவங்க ளில்லாது மெய்
பாலிப்ப துன்பரஞ் சித்துவிளை யாடும்
பரப்பிர்ம்ம சொருப திருவே
நடவுஞ் செநெற்குவிரை யிடவுந் தழைத்தவயல்
நலமுஞ் செழித்த மருதூர்
நாதசங் கத்துய்ய வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே.

7. குஷ்டநோய் காமாலை குன்மம்பவுந்திரங்
குளிர்சுரங் கண்ட மாலை
கொடியகா சம்பீனி சம்மண்டை யிடிசூலை
குக்கிருமல் க்ராணி பித்தங்
கஷ்டமா கியவாய்வு தொடைவாழை யரையாப்பு
கண்வலி வயிற்று வலியுங்
கருமேக வாதம் மகோதரம் படர்பத்து
காதடைப் புக்கி ரந்தி
அஷ்டவித சன்னிபாண் டாகா வலிப்புபல்
லரணைபடு வன்சி லந்தி
அரிசிரங் கொடுவெட்டை நாலாயி ரத்திரா
லாம்நூறு காற்ப தெட்டும்
நஷ்டந் தராதெந்த வ்யாதிக்கு முனையெண்ண
நண்ணு தொழிந் தோடுமே
நாதசங் கத்துய்ய வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே.

8. பரதஜோ திடபண்டி தச்சோலி யதிகமோ
பலதொல்லை யால சதியோ
பக்தர்க் கிரங்கா திருப்பதுந் தருமமோ
பாரப க்ஷமுமாகு மோ
வரதகிரு பாகரா மறதியா னுலுமென்
மாதாசொல் வதுமில்லை யோ
வந்தெனக் குன்சொருப தெரிசனந் தந்திடில்
மகிமைக் குறைச்சலுண் டோ
அரனுனக் கிதுவென்ன வொருபெரிய தோவிதா
லாரும் பழிப்பார் களோ
ஆனுலு முந்தனைத் தீனரட் சகனென்று
அருமறையெ லாஞ்சொல்லு தே
நாதபோ தனர்பணியு மெய்ஞ்ஞான மூர்த்தியே
நலமுதவு கருணை நிதியே
நாதசங் கத்துய்ய வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே.

9. ஜென்மநா ளிதுவரையி லுந்துக்க வாழியிற்
சிறுதுரும் பாய்ச்சு ழன்று
தீயநெஞ் சகரான மாயவஞ் சகிமார்கள்
செய்கின்ற ஸாக ஸத்தில்
வன்மநா ளாகவே நாளெலாம் போச்சுதுன்
மலரடி துதிக்க வெண்ணி
வந்தபின் பும்பெற்ற தந்தைநீ பேசாது
மௌனமே சாதித் திடில்
தன்மைநா ளெதுவுந்த னருள்பெறுவ தென்னுள்
தகுந்தசம யந்தெரிகு வாய்
தானவர்கள் துதிபுரிய வரவே தரும்புகழ்ச்
சாருமிக பரசாத னு
நன்மைநா ளிதுவன்றி வேறுமொரு நாளில்லை
நாடிவந் துதவிபுரி வாய்
நாதசங் கத்துய்ய வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே.

10. கல்லோ யிரும்போ பெரும்பாறை யோவுனது
கடிதான நெஞ்ச மறியேன்
கலிகால மென்றெண்ணி யோமுன்பு தலைமலை
கண்டதே வர்க்கதிலை யோ
சொல்லோ கரும்புதேன் போலில்லை யோயினஞ்
சோதித்த பின்வருவை யோ
சுலபமென் றெண்ணியெல் லோரும்வந் துந்தனைத்
தொந்தரிப் பார்களென் றோ
அல்லோ வலாதினிப் பகலோ செலுவதென்ற
வையமோ தொழிலதிக மோ
ஆனாலு மிப்படிக் கதிவஞ்ச கஞ்செய்வ
தரனுனக் கழகல்ல வே
நல்லோர்கள் துதியிதய கமலத்தில் வாசனே
நடனமெய்ப் பொருளுதவு வாய்
நாதசங் கத்துய்ப வேதவங் கச்சைவ
நாகலிங் கத்தெய்வ மே.

---

## ஸ்ரீ நாகலிங்கப்பெருமான்மீது

### மடக்கடி விருத்தம்

### பதிகம்.

1. திடத்தானே நிச்சயஜோ திடத்தானை யன்பருக்குத்
தீர்க்கா யுட்சேர்
தடத்தானைச் சித்திரத்தேர்த் தடத்தானைத் தனமதிகந்
தரவே நாளைக்
கடத்தானைப் பண்டிதவா கடத்தானை யரவமணி
கமழ்ருத் ராக்க
வடத்தானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

2. திரத்தானை யைந்தெனுமந் திரத்தானை யடியவர்க்குச்
செயமே நல்கும்
கரத்தானைச் சிதம்பரசக் கரத்தானை மேருவில்லிற்
கனியு மாலின்
சரத்தானை வுரித்தணிகுஞ் சரத்தானைச் சருவாண்டத்
தாருங் கோரும்
வரத்தானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

3. சடையானை வரமுதவச் சடையானைத் திருவடியைத்
தாங்கும் வெள்ளை
விடையானை வேதவினு விடையானைத் திடம்படைத்து
விளங்கும் பூதப்
படையானை மறுபடியும் படையானை யடியவர்கள்
பவம்போக் கச்சோர்
வடையானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

4. மதியானைப் பாதகஞ்சம் மதியானை யிகபரமு
மதிக்குஞ் சேது
பதியானை வாமவுமா பதியானை யமரர்புவிப்
பவந்தீர் வையை
நதியானை மகத்துவசன் னதியானை யழகியமின்
னுன தோர்பார்
வதியானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

5. சுகத்தானைச் சவுந்தரியஞ் சுகத்தானைப் பாடலுக்குத்
தோன்று மேற்கு
முகத்தானை முனிவர்கள்ச முகத்தானை மகமதியன்
மூடச் சேயின்
தகத்தானைத் துதிக்கருள்சா தகத்தானைக் கதிமிகுத்த
தவஞ்சேர் மாசி
மகத்தானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

6. தளத்தானைப் பாதபத்ம தளத்தானைப் பகலிரவுஞ்
சதமே சார்கோ
மளத்தானை நிறைந்தபரி மளத்தானைக் கொடியபிணி
மாற்றுஞ் சேடக்
குளத்தானை மதுரிதபா குளத்தானைச் சேதுபதிக்
குரிய நாட்டு
வளத்தானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

7. உரித்தானை மதகரியை யுரித்தானைத் திரிபுரங்க
ளொருங்கே வேகச்
சிரித்தானைப் பிரமசிர சிரித்தானைக் கயிலையன்பர்
சிந்தை யேசஞ்
சரித்தானை நினைக்கவுப சரித்தானை யோகசித்தி
தனையே சார
வரித்தானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

8. கனத்தானைப் பதமலர்க்கோ கனத்தானைப் புவியனைத்துங்
காக்கும் நல்ல
மனத்தானைப் பொருள்பெறநே'மனத்தானை மகிமைசுக்ர
வாரஞ் சேருந்
தனத்தானை வெள்விடைக்கே தனத்தானை மகரிஷியார்
சாரும் வில்வ
வனத்தானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

9. சலியானைப் பதமலரஞ் சலியானை வஞ்சகநெஞ்
சகனைப் பாயும்
புலியானைச் சடையணியம் புலியானை யனுதினமும்
போற்றூர் நெஞ்சில்
மலியானைச் சவுந்தரவி மலியானை மதிமிகுத்த
வானோர்க் கெல்லாம்
வலியானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

10. திருவானை யருள்நிறைமு திருவானை யதிஷ்டசித்தி
ஜெயமே காணத்
தருவானைச் செழியவில்வத் தருவானைத் திரவியந்தந்
தருள்சேர் முத்திக்
குருவானை மகத்துவசற் குருவானை யெண்ணுவதிங்
குடனே நல்க
வருவானைத் திருமருதூர் நாகலிங்கப் பெருமானை
வணங்கு வாமே.

## திருமருதூர் நாகலிங்க

### அறுசீர்த் திரிபுவிருத்தப் பதிகம்.

1. கனமதிகப் பியசடையிற் கங்கையுமான் மழுவணிந்த
கரமும் பாக
மினமதிகப் பழகியமின் விடையுடையாய் கருணைபுரி
விமலா மைந்தன்
மனமதிகப் புகழ்தெரிந்து மகிழநடத் தொடர்பருளுன்
மகிமை காணத்
தினமதிகப் பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த் தேவே.

2. தங்கமலைப் புனிதமயா தவமுனிவோ ரருகிருக்குஞ்
சரணு மேனிப்
பங்கமலைப் பாகிநலா பரமகிரு பாநிதியே
பரவுங் கீர்த்தி
மங்கமலைப் பாகிமனம் வாடவிடா திதுசமய
மகிழ்வே பூணச்
செங்கமலைப் பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த் தேவே.

3. மோகரித்துப் புவிபலைந்த மூடரெலா முனைநினைக்க
முதலே நீகிர்
பாகரித்துப் பவந்தீர்த்துப் பலநலமும் பொருந்தவிக
பாமேன் மைக்கன்

பேகரித்துப் புரிபோர்வைப் பெருமானே திருவருளே
பிரியா வண்ணஞ்
சேகரித்துப் பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த் தேவே.

4. உடம்பரவு ருத்ராக்க வொளிதிகழுந் திருநீறு
முகந்து முன்தே
கடம்பரவு ஞாதிகளைக் கருவறுத்துச் சைவமயங்
காட்டி யன்ப
ரிடம்பரவு ஜிதவருளிங் கிதுவெனவே நிலைதனைநாட்
டிறைவா வென்றுந்
திடம்பரவு பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த்தேவே.

5. சுகமதிக்கப் புதலான துயருலகத் தருள்புரியுந்
துணைநீ யென்ன
மிகமதிக்கப் புக்கிறைவா விமலபரா பரனெனவே
வேண்டு முல்லா
மகமதிக்கப் புதல்விதனை வாய்திறந்து பேசவைத்தாய்
மதிமானைப்போற்
ஜெகமதிக்கப் பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த் தேவே.

6. பூமகரப் பொலிவநிலம் புகழ்மதிசேர் பூவைபடைப்
புடைசூழ் மாரன்
தாமகரப் பொடுபொருதத் தனிமுதலே நுதல்விழியாற்
றணலே செய்து
வாமகரப் பொதுநடத்தே வாஜெனகா தியற்குச்சின்
மயமே தந்தாய்
சேமகரப் பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த் தேவே.

7. பெருந்திவரப் பிரியநலப் பேட்டெகினம் பசுவயலிற்
பெருக்கும் பாலை
அருந்திவரப் போரமஞ்சங் களித்ததர ளங்களைவந்
தடையே காக்கப்

பொருந்திவரப் புகழருளும் பூரணகிர் பாகிதியே
புதல்வன் கீதந்
திருந்திவரப் பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த் தேவே.

8. நயமடையப் பொருபுறம்பாய் நதியிலிருந் திடுவனச
நறுந்தேன் வீழ்ச
மயமடையப் பெருங்கயல்கள் மாந்திமகிழ் நாடுனது
வளமெண் ணுவிர்
தயமடையப் புத்தியரை க்ஷணமுமுற வாடவிடா
தருளும் பாடிச்
செயமடையப் பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த் தேவே.

9. மொழிப்பாகப் பசுந்தொடியாள் முழுமுதலே கபடமிகு
மூலகோ ரென்னைப்
பழிப்பாகப் பேசவிடாப் பக்குவந்தந் துன்னருளைப்
பாலித் தாள்வாய்
விழிப்பாகப் பியமயக்க மிகுதூக்க மாகினேந்து
விரைவாய் வந்து
செழிப்பாகப் பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த் தேவே.

10. நாடிவரும் பரும்பணியும் நடனசிகா மணியெனவே
நவின்று நல்லோர்
சூடிவரும் பொடுதொடுத்த சுகந்தமலர் மாலையெனத்
துதிப்பா ருன்மேற்
பாடிவரும் படிகிடைக்கப் பாமாலை புனைந்தருளும்
பரனே வாழ்வு
தேடிவரும் பொருளுதவுந் திருமருதூர் நாகலிங்க
சிவமெய்த் தேவே.

---

## திருநாகலிங்க யமகவந்தாதிப் பதிகம்.

### கட்டளைக்கலித்துறை.

1. தங்கச்சிவந்தி தரும்பிட்டெலாம்புசித் தாங்குதருத்
தங்கச்சிவந்தி ருகண்கோபப்பாண்டியன் தானடித்தோ
தங்கச்சிவந்தி ருவினேனுங்குபொன்னருள் சார்திருமால்
தங்கச்சிவந்தித் திடுநாகலிங்க தவமயனே.

2. மயமாதரங்க மடுசூழுமோக வகிலநெஞ்ச
மயமாதரங்க மயலாவிழுந்த மலிபொருட்சி
மயமாதரங்க னிவுகூர்ந்திருந்த வரதரச
மயமாதரங்க மழநாகலிங்க வருள்தரனே.

3. தரங்காதியான கலிநோயிலாது தரணியின்மீ
தரங்காதியான கமுமேசிறக்கத் தனமருடீர்த்
தரங்காதியான வனுமீன்றயோகி தவசியரந்
தரங்காதியான திருநாகலிங்க தகுபரனே.

4. பரவத்தனத்தை யனும்வாமபாகம் பனிமதியம்
பரவத்தனத்தை முனிவோரறிந்து பகருமிடம்
பரவத்தனத்தை ரியர்கூட்டிலாது பலநடனம்
பரவத்தனத்தை யருள்நாகலிங்க பசுபதியே

5. சுகரந்தரத்தர் துதிசேருகின்ற ஜொலிநகரச்
சுகரந்தரத்த றிவனுகுமென்று சொலவருளஞ்
சுகரந்தரத்த னமுயோகபாக சுமுகவர
சுகரந்தரத்த குவைநாகலிங்க சுபகரனே.

6. காதலத்தானை முகனேடுநெற்றிக் கனலுதிசி
காதலத்தானைக் களிகூறுனக்குக் கலியொருநி
காதலத்தானை யவிடாதமோக கனதனஞ்சே
காதலத்தானைத் திருநாகலிங்க கதிபரமே.

7. மேதாவியாதி வகையோர்தமக்கு மிகுந்தவர
மேதாவியாதி வருநாட்கொடுத்த மிளிர்பொருளு
மேதாவியாதிக் கவர்போற்றுதேவி விமலியின்ச
மேதாவியாதி யொழிநாகலிங்க விடைமுதலே.

8. முதலம்புயத்துப் பிரமாதிதேவ முனிவர்கள
முதலம்புயத்து ணையுமாகுமென்று மொழியவுறு
முதலம்புயத்து ரகமாவிடமந்த முண்ணுமுழு
முதலம்புயத்துத் திருநாகலிங்க முறைபுரியே.

9. புரிவரத்தான வருமாலயத்திற் புனிதஜெபம்
புரிவரத்தான முளவாசுகித்தடப் பொய்கைவலம்
புரிவரத்தான மதியாற்றெரிந்தற் புதகிருபை
புரிவரத்தான பொருள்நாகலிங்க புயங்கவனே.

10. கவசத்திருந்த கலிநோயிலாது கனதனயோ
கவசத்திருந்த மிழுநாடகத்துக் கனிவுமதற்
கவசத்திருந்த வுலகோர்விரும்பு கதியருள்புங்
கவசத்திருந்த திருநாகலிங்க கருணையனே.

---

## நாகலிங்கயமக வெண்பாமாலை

மதிமான் றணையணிந்த மாதொருபா காமுன்
மதிமான் றனக்கதிக மாக—நிதியுதவ
மேதாவி யேநினைந்து வெள்விடையின் மேல்வாரு
மேதாவி நாகலிங்க மே.

மாதனத்தை வென்றநடை மையலினை லென்னகொஞ்ச
மாதனத்தை வீணாக வாக்கியதுன்—பாதநத்து
மித்திரனை மெற்கு மிகுபொருள்தந் தாளவேநே
மித்திரனும் நாகலிங்க மே.

திருவி னருள்பெருகச் சித்த மிசைவந்
திருவி னருள்பெருகச் செம்பொன்—தருவிமலா
மேற்குமுக மாயமைந்த மெய்யான வாயாற்கு
மேற்குமுக நாகலிங்க மே.

என்னேயு மின்றி யினியாள வேண்டுமிதற்
கென்னேயு மையலதா ரீசனே—பொன்னேசை
மென்மேலும் நாடவர மேதருவாய் மிக்கபுகழ்
மென்மேலும் நாகலிங்க மே.

திடதேக லாவண்யஞ் சேரும் படிவந்
திடதேக லாவலிமைச் சீரும்—நடமாட
வேதாதி னம்பாடு வேளைதவ ராதுசதுர்
வேதாதி நாகலிங்க மே.

தேசுதவி யாதுந் திவலே கவலேயில்லா
தேசுதவி யாதிகலி சேராது—பாசுரமா
வித்வசகா யந்தருவாய் வெற்றிபெற நட்டியபு
வித்வசகா நாகலிங்க மே.

நீதாச தாவோயா நிஷ்டைதுதி யைத்தருவாய்
நீதாச தாயகனே நீடுபுகழ்—ஆதார
மின்னுமணி யெந்தனுக்கிவ் வேளையருட் செய்யிரத்ன
மின்னுமணி நாகலிங்க மே.

சோதித் ததுபோதுஞ் சொற்காதுக் கேருதாச்
சோதித் ததுபோதுஞ் சூழ்ந்ததிரு—மாதுறவு
மிஞ்சுதவி யாதருளின் மெய்ப்பொருளே தந்திடுவாய்
மிஞ்சுதவி நாகலிங்க மே.

வேளே வருந்திடச்செய் வெங்கனற்கண் டேவேயிவ்
வேளே வருந்திடச்செல் வீகமெனக்—காளேயின்மே
வித்தகனே வந்தோர் விடைபகருஞ் சங்கீத
வித்தகனே நாகலிங்க மே.

வந்தாதி சேடன் வலிநோய்தீர்த் தாயமக
வந்தாதி யோர்சிதடன் வாக்குரைக்கத்—தந்தாய்
விகசிதக்கண் வித்தகனே மேதினியில் முத்தமிழ்க்க
விகசிதனே நாகலிங்க மே.

திரும்பா தமனமென்ன திண்ணியகல் லாவ
திரும்பா தமதுசித்த மென்பால்—விரும்பாத
மிக்கவருட் கென்பெருமை மெய்விழிபார்க் கப்பொனெரு
மிக்கவரும் நாகலிங்க மே.

திருந்தவியா கூலஞ் சிறிதுமின்றி நீவந்
திருந்தவியா யிஷ்டசித்தி சேரப்—பொருந்திடுநே
மித்தரனே நாடோறு மேலோங்கச் செய்சிவகா
மித்தரனே நாகலிங்க மே.

சாதுததி சூடுமலர்த் தாளிணையே பூஜித்தஞ்
சாதுததி சூழ்புவியிற் ருன்வாழத்—தீததுத
விர்த்திக் கணமெனக்கு மெய்ப்பொருளே தந்துதவும்
விர்த்திக்க நாகலிங்க மே.

வன்கா தலவுனக்கென் வாக்குரைகொள் ளன்புகொண்ட
வன்கா தலனுயுள் வாழ்வதுதா—வுன்கோ
விலைமதியார் நன்மை மேவுவரோ வில்வ
விலைமதியார் நாகலிங்க மே.

மயங்கா தெனையாள வந்துதவி செய்ச
மயங்கா பொருட்கிடைத்து வாழ்வு—ஜெயநடன
வேடனின்பா லன்பு மிகவுடையோன் முன்னுளோர்
வேடனின்பா நாகலிங்க மே.

தாதாருஞ் சீதபதத் தாயழகிக் கன்பு பொருந்
தாதாருஞ் சீறுவரைத் தண்டிக்க—மாதே
விரதபதா திப்பவனி வேண்டுசுக்ர வார
விரதபதா நாகலிங்க மே.

தேர்ப்பாற் பவனிவருந் தென்மருதூர்ச் சேத்ரவித்வந்
தேர்ப்பா சுரவணிசேர் சீர்வாவி—நீர்ப்பாற்றூழ்
வில்வவனு ரோகணனும் விண்டுமகிழ் கொண்டுபணி
வில்வவனு நாகலிங்க மே.

பன்ன கவியப்பா பாவாணர் சொற்றிடுவிற்
பன்னகவி யப்பா பகரவொணுக்—கன்மனக்க
விச்சித்தி ராதுசெய்து மெய்யன்பர்க் கேயுதவு
விச்சித்ரா நாகலிங்க மே.

பாவியப்பா வென்றெனைக்கண் பாரா திருந்தாலும்
பாவியப்பாச் சொல்லியுந்தன் பாதம்விடேன் — பூவிதிரு
வெங்கடன்தீர்த் தத்துளப விண்டுபணி கொண்டபாரா
வெங்கடன்தீர் நாகலிங்க மே.

துக்கமொழியத் துடருகலி யானதையொ
துக்க மொழியத் துவிதனே—பக்கு
விபரமுனை யல்லாது வேறினியார் வாழ
விபரமுரை நாகலிங்க மே.

முல்லாசா பெற்றமகள் மூகந் தவிரவரு
முல்லாசா வந்திமையோர் மோகமுறக்—கெல்லியுழு
மேருவில்லி சூழ்கழனி மேவுமய மாமருதூர்
மேருவில்லி நாகலிங்க மே.

பாகா விரிசடையாய் பக்தர்க் கருள்புரியன்
பாகா விரிசலங்கள் பாயூரு—மோகா
விசனமொழி யாலயமுன் வீம்பே புரிகெர்
விசனமொழி நாகலிங்க மே.

வான வரும்படியு மையா வெனக்கேது
வான வரும்படியும் வந்திடச்செய்—தேனமுத
வீணுகா னம்பெருகு மெய்ப்பதியோ யென்முறையும்
வீணுகா நாகலிங்க மே.

பாகஞ்சி தாகிருபை பாலித்துத் திவ்யசொரு
பாகஞ்சி தானந்தப் பண்புடனே—யோகமிகு
மேன்பாடாய் வாழெனவே விஞ்சைமந்தி ரத்தையின
மேன்பாடாய் நாகலிங்க மே.

தாரகவி நாயகனே தன்மகவாய்க் கொண்டாடு
தாரகவி நாயகனே தாவருளிங்—நேர
விரும்பவரு முந்தனுக்கே மெய்யுண்டு மன்பர்
விரும்பவரு நாகலிங்க மே.

தோதிசையும் பாதா சுகந்தாவென் றேன்கேளா
தோதிசையும் பாதாதி தோத்திரஞ்செய்—நீதமய
மேலோங் கதிரமண வித்வசட விர்த்தியுமென்
மேலோங்க நாகலிங்க மே.

சிரஞ்சீவித் தென்மனதைச் சிந்தவிடா தென்றுஞ்
சிரஞ்சீவித் தென்பருளுந் தேவே—தரமோ
மித்திடுவாய் முத்தமிழை வேகமுடன் சொல்லிடநே
மித்திடுவாய் நாகலிங்க மே.

மகரந்தப் பாதவர வந்தருளு வாய்சே
மகரந்தப் பாதவர மாக்க—விகபரசொல்
வேம்பணியும் பாலதைச்செய் வேமறுகு வில்வமலர்
வேம்பணியும் நாகலிங்க மே.

மார்க்கண்ட னுக்கெழுதி வைத்ததுபோல் மிக்ககல்வி
மார்க்கண்ட னுக்ரஹிசன் மார்க்கதரா—தீர்க்காயுள்
வேதமதி நீதருவாய் வேறுகட வுள்கொடுக்க
வேதமதி நாகலிங்க மே.

பூர்வ முதலதிட்டப் பொன்னிலினி மேல்வரவ
பூர்வ முதலதிட்டம் பூணவடி—யார்கள்தய
வேற்கருளுந் தேவே விகசிதஞ்சேர் ஞானசத்தி
வேற்கருளும் நாகலிங்க மே.

(சுபம்).

## ஆசிரிய விருத்தம்.

செந்தா மரைப்புட்ப நிறைதடா கமுமுல்லை
செண்பகம் பாரி சாதம்
செறிநந்த னவனமிசை வண்டுரீங் காரங்கள்
செய்யவுங் குயில்கள் பாட
கொந்தாரு வில்வவன மயிலாட வளர்கிளைக்
கூட்டங்கள் மொழிமதுர மாய்க்
குலவியே விளையாடு மகிமையைக் கண்டுமகிழ்
குருபரா பரவஸ்து வே
சிந்தா குலந்தீர விதுசமய மேவந்து
திருவருட் புரியு மிஷ்ட
சித்தியு மனோரம்ய வாழ்வுங் கொடுத்துதவு
ஜெகமெலாம் புகழ்பரவ வே

மந்தார மேகங்கள் பொழிதாளம் நிலமீது
மண்டிக் கிடக்கும் ரமண
மருதூ ரிருந்துவளர் திருநாக லிங்கமெனும்
மழுமா னணிந்த சிவமே.

தந்தைநீ யெண்ணு திருந்தாலு மெனையீன்ற
தாய்சவுந் தரநாய கி
தமியேன் வருந்தச் சகிப்பளோ நின்னிடஞ்
சாற்று திருந்திடுவ ளோ
விந்தையிது தானினம் பேசா திருக்கின்ற
விபரந் தெரிந்திட விலை
வேதைப் படுத்தியது போதுமிக பரமீது
மெய்யெனக் குதவு தெய்வஞ்
சிந்தைகுடி கொண்டதெது சித்துள்ள தெதுவதிக
ஜெயநயந் தருவது மெது
திடமாக வுனையன்றி வேறிலைத் தீர்க்காயுள்
திரவியந் தந்தாளு வாய்
மந்தைவலம் வந்தகுக னைந்துகர னிருவர்களை
மகனாக வுங்கொள் முதலே
மருதூ ரிருந்துவளர் திருநாக லிங்கமெனும்
மழுமா னணிந்த சிவமே.

செந்தா திருந்தொளிரு வனசவா சுகிவாவி
தீர்த்தமா டிடுநேர மோ
தேவிசௌந் தரியிட்ட வமுதருந் திப்பள்ளி
சென்றுகொஞ் சிடுநேர மோ
வந்தாதி சேடன்முத லுலகநோ யற்கரு
மருந்துதந் திடுநேர மோ
வானவர்கள் குறைதீர வந்தஞ் சலித்திட
வரங்கள் தரு கிறநேர மோ
அந்தாதி நூறுகவி யுஞ்சொன்ன தலைமலைய
னன்பையெண் ணிடுநேர மோ
அதிகபக்தி யர்செய்த சதகதம் பம்படித்
தானந்த முறுநேர மோ

சிந்தா குலந்தீர வாரா திருப்பதேன்
திறமிகும் பொருளுதவு வாய்
திரிகால முந்துதிசெய் மருதூ ரிருந்துவளர்
திருநாக லிங்க சிவமே.

## பஞ்சலிங்கத் தலம்

ஜெயமிகுஞ் சேதுபதி தீர்த்தமூர்த் திவிசேட
க்ஷேத்திரச் சித்தி மகிமை
செப்பரிய யிமனேசு ரத்தினிற் கதியுதவி
செய்திடு மகாலிங்க மாம்
மயமிகுஞ் செல்வமுபர் சாளைக் கிராமத்தில்
வரகுணே சுரலிங்க மாம்
மகிழ்தருங் கொளுவூரில் நாகநா தப்பெயர்
வழங்கிடு தயாலிங்க மாம்
குயமிகுஞ் சோலைநிறை வைகைவட கரையுற்ற
குணநதீ சுரலிங்க மாம்
குவலயம் புகழ்கின்ற மருதூ ரிருந்துவளர்
குருநாக லிங்க மெனவே
நயமிகும் பஞ்சலிங் கத்தலப் ரணவத்தின்
நடுவா யிருந்த பொருளே
நாதமந் திரபடிவ சிதசந் திரசடில
நாகசுந் தர வடிவமே.

## சொருபத்யானம்.

கங்கைதிங் களுமரவு புனைஜடா மகுடமுங்
கருணையி னுதற் கண்களுங்
கவசகுண் டலமிலகு செவிகளுந் திருநீல
கண்டருத் ராக்க வடமுஞ்
செங்கைமழு மானேடு திரிசூல முஞ்ஜோதி
திகழுமெக் ஞோப வீதத்
திடமேவு மிடையணி புலித்தோலி னுடையுந்
திவ்யசெஞ் சரண மலையின்

மங்கையொரு பாகமுந் தங்குவிடை மீதேறி
மதிசிவ கணங்கள் சூழ
மதுரவாத் தியசங்க நாதமு முழங்கவெதிர்
வந்தெனது சிந்தை மகிழத்
தங்கைவளர் திருமாது பொருளுமுன தருளுமிது
ததியுதவி டுங்கற்ப கத்
தருவே நிறைந்ததிரு மருதூருறைந்துபுகழ்
தருநாக லிங்க சிவமே.

## பஞ்சாமிர்த நாகலிங்க தோத்ரம்.

பசித்தாலும் நாகலிங்கமென் பேன்பெறின்பவனமதைப்
புசித்தாலும் நாகலிங்கமென் பேன்தகும் புதுவமுதம்
ருசித்தாலும் நாகலிங்கமென் பேன்பகருலகிலெங்கு
வசித்தாலும் நாகலிங்கமென் பேன்விடைவரும்சிவமே.

உண்டாலும் நாகலிங்கமென் பேன்படுத்தொருவுறக்கங்
கொண்டாலும் நாகலிங்கமென் பேனதிற் குறிகனவைக்
கண்டாலும் நாகலிங்கமென் பேன்விழிக்கவம்புரியுந்
தொண்டாலும் நாகலிங்கமென் றேதினந்துதிசெய்வனே.

நின்றாலும் நாகலிங்கமென் பேன்நினைத்தவிடம்விட்டுச்
சென்றாலும் நாகலிங்கமென் பேனடத்தினிலெவரை
வென்றாலும் நாகலிங்கமென் பேனந்தவிளைவில்வரும்
நன்றாலும் நாகலிங்கமென் பேனெந்தநகரினுமே.

பாடினும் நாகலிங்கமென் பேன்விருப்பதிகநட
மாடினும் நாகலிங்கமென் பேனதற்கறிவரெவர்
தேடினும் நாகலிங்கமென் பேன்பெருந்திரவியங்கை
கூடினும் நாகலிங்கமென் பேனுனக்குறுதொண்டனே.

புகழ்ந்தாலும் நாகலிங்கமென் பேன்தகும்புத்தியிலா
ரிகழ்ந்தாலும் நாகலிங்கமென் பேன்பெருகின்பம்வந்தூ
திகழ்ந்தாலும் நாகலிங்கமென் பேனின்திருவருளெந்
நிகழ்ந்தாலும் நாகலிங்கமென் பேனிதுநிச்சயமே.

## திரிபுக்கலித்துறை

### பாதக நிவர்த்தி

வாதம் படிந்த மதுகாமஜீவ வதைகளவு
தீதம் படிந்த புலையாதி முன்னஞ் செறிந்தபவத்
தோதம் படிந்த வினையாவு மேமரு தூரெலையிற்
பாதம் படிந்த வுடனே கிடும்பஞ்ச பாதகமே.

### பிணி நிவர்த்தி

உதித்த வுடனே சமதாக மோக வுவர்க்கடலிற்
குதித்த வுடனே கவியாதி நல்கக் குருமருந்தைத்
துதித்த வுடனே தீராதநுவுமரு தூரெலையில்
மிதித்த வுடனே பறந்தோடுமேயெந்த வ்யாதியுமே.

### சிகர மகத்வம்

மகரங் கனிந்து பழமேவு வில்வ வனவழியாய்ச்
சுகரங் கனிந்து நதியாடி வந்து தொழுதிசையும்
பகரங் கனிந்து மணிநாக லிங்க பதிமருதூர்ச்
சிகரங் கனிந்து பணிவோர்க்கு முத்தியுஞ் சித்திக்குமே

### வாசுகி தீர்த்த மகத்வம்

நீசுகி தீர்த்தம் மதவேளை யென்னை நினைத்திடுமன்
பாசுகி தீர்த்த வனமான தென்னப் பகட்டுமினுர்
பேசுகி தீர்த்த வசனுவ கேட்டுப் பிணியறுமே
வாசுகி தீர்த்தப் புனலே படிந்து வருபவர்க்கே.

### சன்னிதி மகத்வம்

பொன்னிதிக் கோடி தினமே பொருந்திப் புகழ்பெருகி
மின்னிதிக் கோடி னிமையாக வாழ்வு மிகுதிபெறக்
கன்னிதிக் கோடி லதுவாயும் பேசக் கமழ்மருதூர்ச்
சன்னிதிக் கோடி வருவோர்கள் புண்ணிய சாலிகளே

## புற்றடி மகத்வம்

மற்றடி சுற்றி நமனேவ ராத வணந்தடுக்கக்
கற்றடி சுற்றி லகுக்ஷேத்தி ராதிகருதியென்ன
பற்றடி சுற்றி மருதூரின்கோவிற் பதியுள்வளர்
புற்றடி சுற்றி வருவோர்கள் மோக்ஷம் புகுபவரே

## வெண்பா

பொன்னுங் கிடைக்கும் புகழதிக முங்கிடைக்கு
மின்னுங் கிடைக்குமுத்தி யின்பநல — மின்னழகி
பாகலிங்க மான பரனுந் திருமருதூர்
நாகலிங்கந் தன்னைநம்பி னல்.

## தனவிர்த்தி.

### யமகத்துறை.

திரவியந் தாருந்தெளிதேன் கசிந்துசெழுமலர்ச்சேத்
திரவியந் தாருந்திரிகால ஞானிதிடமிகுமிந்
திரவியந் தாருந்தரிதே சிகாவென்சித்தமெனுந்
திரவியந் தாருந்திருநாக லிங்கஜெபதரனே.

தனந்தா வனந்தந்தியுமானு மேயத்தகுந்தகுளத்
தனந்தா வனந்தந் திடுகோ கனமுத்தடையுறம
தனந்தா வனந்தந் தியிநேரமேஜொலிசம்ப்ரமகீ
தனந்தா வனந்தந் திருநாக லிங்கதயவரனே.

பாக்கியஞ் சேருந்தொழுமாடு பத்தும்பசுக்கள்தமிழ்ப்
பாக்கியஞ் சேருந்தனையே துதிக்கும்படிமகிழ்ந்தன்
பாக்கியஞ் சேருந்தபயோக சித்திப்பவுசருள்சௌ
பாக்கியஞ் சேருந்திருநாக லிங்கபசுபதியே.

நிதியுந் தரத்தமணியாதி சூழுநிபுணசங்க
நிதியுந் தரத்தயவுகாண வேயென் நினைவுதயா
நிதியுந் தரத்தனுனையே யலாதுநேரினியார்
நிதியுந் தரத்தகுவைநாக லிங்கநிமலவனே.

கனக மதிகம்புனேதேசி காவைங்கரயிபமு
கனக மதிகம்புளகாங்க மாகக்கனிதருகோ
கனக மதிகம்பிகையா னனத்தைக்கருதரனே
கனக மதிகம்பெறநாக லிங்கங்கனிவருளே.

(சுபம்).

இராமநாதபுரம் மஹாராஜா ஷண்முகராஜேஸ்வர

## M. நாகநாத சேதுபதியவர்கள்மீது

வாழ்த்துப்பா.

ஸ்ரீமதிர ணியகெர்ப்ப யாஜிரவி குலமுத்து
ஜெயவிஜய ரெகுநாத வேள்
ஜெனனசந் ததிதிலக கர்ணவ தாரமெய்ச்
சித்தபாஸ் கர பூபதி
நேமதவ புத்திர சிகாமணி மகாசங்க
நிதிமுத்து ராம லிங்க
நிபுணப்ர தாபமதி யூகியருள் சற்குணன்
நித்யசம் பன்ன யோகன்
நாமமணி யுங்கடவுள் மகிமைதிரு மருதூர்
நலன்தனுஷ் கோடி க்ஷேத்ரன்
நடனசங் கீதப்ரீ யன்கமழு முத்தமிழின்
ஞானப்ர காச விதயன்
சோமசுந் தரகவுரி குமாரனுக் குதவியருள்
சுடராயு தப்பெயரி னேன்
துதிகொள்ஷண் முகராஜே சுரநாக நாதசே
துபதிநெடு நாள் வாழ்கவே.

சுபம்.

## சம்பூர்ண வாழி விருத்தம்.

திருமருதூர் நாகலிங்கப் பெருமான் வாழி
தேவியுமை சவுந்தரநா யகியும் வாழி
பருமதகுஞ் சரமுகதற் பரனும் வாழி
பழநிமலைக் குமரகடம் பனுமே வாழி
தருமமிகுஞ் சேதுபதித் தனதன் வாழி
தரணிபுகழ்ப் பெருகுசத்தி வேலன் வாழி
வருமகிழுந் தருநாகா பரணம் வாழி
வாசித்தோர் கேட்பவரும் வாழி மாதோ.

சுபம்.

முற்றிற்று.

---

விவேகாநந்தா பிரஸ், மதுரை:—37.

# அரும்பதவிளக்கம்.



| | | |
|---|---|---|
| 28-ம் பக்கம் | 2-வது பாட்டு | 1-வது வரி—மயம்-அழகு, மாலக்ஷ்மீகரம், தரங்கம்-சமுத்திரம். |
| ஷை | ஷை | 2-வது வரி—அயம்-இரும்பு. |
| ,, | ,, | 3-வது வரி—ஆதரம்-அன்பு. |
| ,, | 3-வது பாட்டு | 1-வது வரி—தரங்கம்-இக்கட்டு. |
| ,, | 5-வது பாட்டு | 2-வது வரி—சுகரம்-தருமம். |
| ,, | ,, | 3-வது வரி—அஞ்சுகரந்த — பஞ்சதருக்கள் மறைத்த, அரத்தனம் — இரத்தினம். |
| ,, | 6-வது பாட்டு | 2-வது வரி—சிகரதலத்தானே - மலைக்ஷேத்ர முருகனே. |
| 29-ம் பக்கம் | 1-வது பாட்டு | 2-வது வரி—அமுதலம்பு - அமுதங்கடைந்து. |
| ,, | ,, | 3-வது வரி—உறுமுதலம் — சப்திக்கும்கடல், புயத்து-ஒருபக்கத்து. |
| ,, | 2-வது பாட்டு | 1-வது வரி—புரிவர—ஆசைவர. |
| ,, | 3-வது பாட்டு | 1-வது வரி—கவசம்-மூடுதல். |
| ,, | ,, | 3-வது வரி—அவசம்-மயக்கம். |
| 33 ம் பக்கம் | 1-வது பாட்டு | 1-வது வரி—சிர் அஞ்சு-விலகும் ஐம்புலன்கள். |
| 37-ம் பக்கம் | 1-வது பாட்டு | 1-வது வரி—வாதம்படிந்த-உயிர்வேதனையமைந்த. |
| ,, | ,, | 2-வது வரி—தீதம்-தீமை. |
| ,, | ,, | 3-வது வரி—அம்படிந்த — பாணத்தையும்வென்ற. |
| ,, | 3-வது பாட்டு | 1-வது வரி—மகரங்கனிந்து - வானளாவிப்பழுத்து. |

37-ம் பக்கம் 4-வது பாட்டு 2-வது வரி—சுகிது-பால், ஈர்த்த—இழுத்த.

„ „ 3-வது வரி—கிதி-கோடி, ஈர்த்த —குளிர்ந்த.

„ 5-வது பாட்டு „ கன்னிதிக்கோடிலது முல்லாமகள் திக்கா வாய்பேச.

38-ம் பக்கம் 1-வது பாட்டு 1-வது வரி—மற்றடி-மல்தடி.

„ „ 2-வது வரி—கற்றடிசுற்றி- கல்த இசுற்றி.

„ „ 3-வது வரி—பற்றடிசுற்றி - வலிமை யான அஸ்திவார கொண்டமதிலையுடை

„ 3-வது பாட்டு 1-வது வரி—திரவியந்தாரு-திடத் விசாலமான தரு களும்.

„ „ 3-வது வரி—இந்திரவி-சந்திரசூரிய அம்தாரும் - அழகி மாலையும்.

„ 4-வது பாட்டு 1-வது வரி—தனந்தாவனம்-தன் தாவனம்.

„ „ 2-வது வரி—அனம்-அன்னம், வனம்-அசைதல்.

„ „ 3-வது வரி—மதனம்தாவ —வசந் காலமேவ, நந்து-சங்

சுபம்.



